[8th September 1958

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : தொழில் துறையில் பின் தங்கியிருக்கும் பழனி போன்ற இடங்களில் பாலிடெக்னிக்குகளை அமைக்க தேவஸ்தானங்கள் முன்வந்தால், அதற்கு சர்க்கார் அனுமதி அளிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதுரையில் இப்போதே இரண்டு பாலிடெக்னிக்குகள் இருக்கின்றன. ஆகையால், இது வரையிலும் பாலிடெக்னிக்குகள் இல்லாமலிருந்துவரும் ஜில்லாக்களுக்கு முதலிடம் கொடுத்துவிட்டு, அதற்குப் பிற்பாடு மற்ற ஜில்லாக்களிலும் இன்னும் பாலிடெக்னிக்குகள் ஆரம்பிப்பதுபற்றி பரிசீலனை செய்யலாம்.

SRI M. JAGANNATHAN : May I know, Sir, whether the Union Government have given any financial aid to the State Government for the starting of these polytechnic schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes. The major share is found by the Central Government.

*Houses for Harijans*

* 91 *Q.*—SRI D. S. AUTHIMOOLAM (on behalf of Sri A. PERUMAL) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுவது சம்பந்தமாக அரசாங்கம் கொடுத்துள்ள மானியத்திற்கு மிகவும் குறைந்த மதிப்புள்ள வீடுகள் கட்டப்படுவதாக ஏதாகிலும் அரசாங்கத்திற்குத் தகவல் கிடைத்துள்ளதா ?

(ஆ) அப்படியானால், அதை நிவர்த்திக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.
(*b*) Does not arise.

*Marriages*

* 92 *Q.*—SRI P. G MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ரிஜிஸ்தர் கலியாண சட்டத்தை திருத்தி அமைத்த பிறகு எத்தனை கலியாணங்கள் சப்-ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்களிலே பதிவு செய்யப்பட்டன ?

(ஆ) மணமக்களின் இல்லங்களிலே பதிவு செய்யப்பட்ட கலியாணங்கள் எத்தனை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Presumably the information desired is about the number of marriages registered under the Special Marriage Act, 1954, which replaced the Special Marriage Act, 1872, with effect from 1st January 1955. The number of marriages registered under this Act at the offices of the Marriage Officers appointed under the Act during the period from 1st January 1955 to 20th June 1958 is 757.

(*b*) The number of marriages registered under the Act at the residences of the parties to the marriages during the same period, viz., from 1st January 1955 to 20th June 1958 is 164.

SRI P. G. MANICKAM : இவ்வாறு நடத்தப்படும் திருமணங்களைப் பற்றி ஜனங்களுக்கு தெள்ளத்தெளிவாக பிரசாரம் மூலமாகவோ அல்லது விளம்பரம் மூலமாகவோ அறிவிக்கப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒரு அவசியம் இருக்கிறது என்று அரசாங்கம் கருதவில்லை.